# கால்பந்தின் நட்சத்திரம்

மினா ஜவார்பின்
தமிழில் கிருஷ்ணன்





நான் பாலோ மார்ச்சிலோ பெலிசியானோ.
நான் கால் பந்து விளையாட்டில்
நட்சத்திரமாக ஜொலிக்க போகிறேன்.
என் ஊர் பாவேலாக்கு பெருமை
சேர்ப்பேன்.
ஏன் பிரேசில் நாட்டுக்கே பெருமை
சேர்ப்பேன்.

காரிஞ்சா, பேலே, ரொனால்டோ போன்ற
நட்சத்திர ஆட்ட காரர்கள் கூட இங்குள்ள
தெருக்களில் விளையாடியவர்கள் தான்.
நானும் அவர்களை போல
நட்சத்திரமாவேன்.
ஏனென்றால் அவர்களை போல நானும் ஒரு
சாம்பியன் தான்!

ஆசிரியர் குறிப்பு

பிரேசில் நாட்டு குழந்தைகள் வறுமை எனும் எதிரியிடம் நிதமும் போராடுகிறவர்கள். சிறு வயது முதலேயே வாழ்க்கை போராட்டத்திலேயே கழிவதால் அவர்களுக்கு கால் பந்து போட்டி ஒரு பெரிய சவாலாக தெரியவில்லை. வறுமையில் போராடி மேலே எழுந்து வந்த எல்லா வீரர்களுக்கும் இந்த கதையை நான் சமர்ப்பிக்கிறேன்.



நான் பாலோ மார்ச்சிலோ
பெலிசியானோ. நான் பெரிய கால்
பந்து வீரனாகும் போது
என் அம்மா நீண்ட நேரம் உழைக்க
தேவை இல்லை. நான் அம்மாவை
விட்டு ரொம்ப நேரம் பிரிந்திருக்க
தேவை இல்லை.

நான் முழு நாளும் மிஸ்டர் டா-
சில்வாவுக்கு உதவியாக வேலை
செய்கிறேன். என் வேலை முடிந்த
பின் நான் கால் பந்து விளையாட்டு
பயிற்சி செய்கிறேன்.

இரவில் என் தங்கை
மரியாவும் நானும் படிப்போம்,
எழுதுவோம், பிறகு
விளையாடுவோம். என்
தங்கைக்கு சில கால் பந்து
நுட்பங்களை சொல்லி
தருவேன்.





அவள் எனக்கு பள்ளிக்கூட கணக்கு சொல்லி தருவாள்.



இன்று காலையில் அம்மா எனக்கு நிறைய நெய்
அப்பம் சுட்டு வைத்திருந்தாள். அதை என் குழுவில்
இருக்கும் நண்பர்களுக்கு எடுத்து சென்று பகிர்ந்து
கொண்டேன்.
இன்று எங்களுக்கு சக்தியும் உற்சாகமும் வேண்டும்.
ஏனென்றால் இன்று கடற்கரையில் கால் பந்து
பந்தயம் ஒன்று காத்து கொண்டிருக்கிறது.

நான் நெய் அப்பத்தை தின்று கொண்டே
மரியாவுக்கும் கொஞ்சம் கொடுத்து
அனுப்பினேன். பிறகு அவள் பள்ளிக்கூடம் வரை
இருவரும் ஓடி சென்றோம்.

போகும் வழியில் கால் பந்து விளையாடி கொண்டே போவோம்.

நான் பந்தை உதைக்க
அவள் தலையை எம்பி பந்தை எனக்கு தள்ளுவாள்.

நான் பந்தை மரியாவுக்கு அனுப்புவேன்.
அவள் முட்டியில் தடுத்து எனக்கு அனுப்புவாள்.

நான் பந்தை வேகமாக உதைத்து அவள் தோள்களுக்கு அப்பால் போடுவேன்.
அவள் கரணம் அடித்து பந்தை திருப்பி எனக்கு தள்ளுவாள்.

மரியா வின் திறமையால் நான் மகிழ்ச்சி அடைந்துவிட்டேன் என்று அவளுக்கு தெரியும்.
“என்னை உன் குழுவில் சேர்த்து கொள்வாயா” என்று கேட்டாள்

இதை ஒவ்வொரு நாளும் மரியா என்னிடம் கேட்பாள்
இதற்கு என்னோடைய பதில் ஒன்றாகவே இருக்கும்.
எங்கள் குழுவின் முதல் விதி “பெண்கள் அனுமதி இல்லை” என்பேன்.

இதை கேட்டவுடன் மரியா வின் முகம் சோகமாகி விடும்.
“அதனால் அவளை உற்சாக படுத்துவதற்கு இன்னும் பயிற்சி செய்வோம்” என்பேன் நான்.
மெலிதாக சிரித்து விட்டு அவள் கையசைத்து விட்டு அவள் வகுப்புக்கு சென்று விடுவாள்.



அங்கிருந்து கார்லோஸ் இடத்திற்கு சென்றேன்.
அவன் ஷூ க்களை பாலிஷ் செய்து
கொண்டிருந்தான். அவன் தங்கையும் அவனோடு
இருந்தாள்.
ஒரு நாள் அவன் மிக சிறந்த கால் பந்து வீரனாக
வருவான் என்பதில் எந்த ஐயமும்
இல்லை. அவனுடைய குறி எப்போதும் தப்பாது!



என் நண்பன் ஜோசே க்கும் ஒரு
அப்பம் கொடுக்க சென்றேன்.
அவன் இன்று சுற்றுலா
பயணிகளுக்காக தண்ணீரில்
குதித்து வேடிக்கை காட்டி
கொண்டிருந்தான்.
ஒரு நாள் அவன் கால் பந்து
போட்டியில் பந்தை தாவி குதித்து
பிடிப்பான்.
எங்கள் குழுவை வெற்றி அடைய
செய்வான்.



அங்கிருந்து என் நண்பன் ஜிவோ வின் இடத்திற்கு சென்றேன். அவன் திருவிழாவிற்கு தேர் அலங்காரம் செய்து கொடுப்பவன். அங்கு ஆடும் நடன கலைஞர்களுக்கு உதவி செய்பவனும் கூட.

எனக்கு தெரியும் அவன் ஒரு நாள் பந்தயத்தில் கால் பந்தை கொண்டு நடனம் செய்ய போகிறான் என்று. அப்போது மொத்த ஊருமே ரசிக்க போவதில் சந்தேகமில்லை.

அதன் பின்னர் என் நண்பன் பெட்ரோ விடம் சென்றேன். அவன் தென்னை தோப்பில் மரம் ஏறி கொண்டிருந்தான். அவன் ஒரு நாள் கால் பந்து விளையாட்டில் உச்சம் தொடுவான். நாட்டிற்கு கேடயங்களை அள்ளி கொண்டு வருவான்.




நான் பாலோ மார்ச்சிலோ பெலிசியானோ.
என் குழுவை வெற்றியின் உச்சிக்கு கொண்டு செல்வேன்.
அதன் பின்னர் என் மக்கள் ***கேப்டன் பெலினோ ! எங்கள் நாட்டின் நட்சத்திரம் !”*** என்று அழைப்பார்கள்.

பெலினோ! நீ ஏற்கனவே தாமதமாக வந்திருக்கிறாய்! என்று மிஸ்டர் டா- சில்வா கத்தினார்.



நங்கள் கடலுக்குள் சென்றோம்,
தக்க நேரம் வரும் போது நான்
வலையை கடலில் தூக்கி
எறிந்தேன்.
கரு மேகங்கள் வானில்
நிறைந்திருந்தன.

மீண்டும் மீண்டும் வலையை
தூக்கி எறிந்தேன்.
பின்னர் வலையை இழுத்து மீனை
எடுத்தோம்
மிஸ்டர் டா சில்வாவும் நானும்
இன்று இரவு விளையாட்டை பற்றி
பேசி கொண்டிருந்தோம்.
அந்த தொடு வானத்தையே
பார்த்து கொண்டிருந்தேன்
எப்போது மேகங்கள் கலையும்
என்பதேயே கவனித்து
கொண்டிருந்தேன்.

பெலினோ இன்றைக்கு இது போதும் என்று மிஸ்டர் டா- சில்வா கூறினார்.

திடீரென்று கரு மேகங்கள் எல்லாம் மறைந்து போயின கடல் கரையிலிருந்தும் என் எண்ணங்களிலிருந்தும்.

படகை கடற் கரை நோக்கி இழுத்து சென்றோம்.

என்னுடைய நண்பர்கள் அதற்கு உதவினார்கள்.

நாங்கள் திட்டம் தீட்டி பயிற்சி செய்தோம்.

ஜோசே பறந்து சென்று பந்தை பிடிப்பான்.



ஜிவோ தலையை எம்பி பந்தை தள்ளுவான்.



கார்லோஸ் காலால் எத்தி பந்தை உதைப்பான்.



பெட்ரா பந்தை குறி பார்த்து தள்ளுவான்.

பெலினோ பந்தை கூடைக்குள் தள்ளி ஸ்கோர் அடிப்பான்!

மரியா கார்லோஸின் தங்கைகளுடன் வந்து சேர்ந்தாள். குழுவின் மீதி விளையாட்டு வீரர்களும் வந்து சேர்ந்தார்கள்.

என் தங்கை குழுவின் மற்ற நண்பர்களிடம்
“என்னையும் குழுவில் சேர்த்து கொள்வீர்களா?” என்று கேட்டாள்
“அவள் திறமையானவள்” என்று நான் கூறினேன் சிரித்து கொண்டே
கார்லோஸின் தங்கைகளும் ஆதரித்தனர்
ஆனால் மற்ற பசங்களோ முடியாது என்று கையசைத்தனர்.
“சரி நானும் இப்போது வேண்டாம்” என்று மரியாவிடம் சொன்னேன்.

விளையாட்டு ஆரம்பமானது.
பந்தை முன்னேறி தாக்கினார்கள்
ஆட்டக்காரர்கள்.

ஜோசே பந்தை பிடிக்க குதித்தான். ***விர்!***
ரென்று பந்து பறந்தது

ஜோசே மணிக்கட்டை அழுத்தி விழுந்தான்.
நான் அவனை நோக்கி ஓடினேன்.
“மணிக்கட்டு உடையவில்லை” என்றார் மிஸ்டர் டா சில்வா.
“ஆனால் ஜோசே ஓய்வு எடுக்க வேண்டும்” என்றார்.

ஜிவோ கோல் கீப்பர் ஆக நின்றான் இப்போது விளையாடுவதற்கு குழுவில் ஒருவர் குறைவாகவே இருந்தது

“மரியா?” என்று நான் குழுவை நோக்கி கூறினேன்
ஜிவோ “முடியாது” என்றான்
பெட்ரா “சரி” என்றான்
கார்லோஸ் “எப்படியானாலும் எனக்கு ஒன்றும் இல்லை” என்றான்



என்னுடைய முறை வந்த போது, மாற்றத்திற்கே என் மனம் ஏங்கியது.
நான் என் தங்கையை பார்த்து கையசைத்தேன். “நேரம் வந்தாச்சு” என்றேன்.
மரியா களத்தில் இறங்கி ஓடினாள்.



களத்தில் பந்து ஓடும் இடங்களிளெல்லாம்
மரியாவும் ஓடினாள்
தலையால் பந்தை  எம்பி தள்ளினாள்
பெட்ராவிடம்
முட்டியால் தள்ளினாள் பந்தை
கார்லோஸிடம்
பந்து அவள் தோளை தாண்டி பறந்த
போது
கரணம் அடித்து ஒரு உதை கொடுத்தாள்
பந்திற்கு

**பந்து கோலில் போய் விழுந்தது !**



நான் பாலோ மார்ச்சிலோ
பெலிசியானோ.
அணியின் தலைவன் நான்.
புயலே அடித்தாலும், எவ்வளவு தடை
வந்தாலும்
நாங்களே வெற்றி பெறுவோம்.

எங்கள் விசிறிகள் ஒரு நாள் எங்களை
நட்சத்திரங்கள் என்று அழைப்பார்கள்.
பிரேசிலில் உள்ள ஒவ்வொரு வீட்டிலும்
வெளிச்சம் கொண்டு வருவோம்.